உ

கணபதிதுணை.



ஔவையார் அருளிச்செய்த

# விநாயகர் அகவல்.



இஃது

அஷ்டாவதானம்

பூவை

கலியாணசுந்தரமுதலியாரால்

பரிசோதிக்கப்பட்டு

சென்னை-சூளை

நிரஞ்சனிவிலாச அச்சுயந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.



1892வரு.

சிவமயம்.

# இதிலடங்கிய புத்தகங்களின்,

## அட்டவணை.



அட்டவணை - முற்றிற்று.

---

## விளம்பரம்.

---

இதனால், சகலருக்கும் தெரிவிப்பது யென்னவென்றால் முன் அச்சிட்டிருக்கிற புத்தகங்களில் சில புத்தகங்கள் இல்லாதபடியால் இப்போது நூதனமாக சில புத்தகங்கள் அச்சிட்டிருக்கிறபடியால்வேண்டியவர்கள், சென்னை-சூளை, அவதானம்பாப்பய்யர்வீதியில் 88-வது எண்ணுள்ள கிரகத்தில் ஸ்தாபித்திருக்கும் நிரஞ்சனிவிலாச அச்சுக்கூடத்தில் பெற்றுக்கொள்ளலாம்.

இப்படிக்கு,
☞ பி-வே-நமசிவாயமுதலியார்.

கணபதி துணை.

# விநாயகசதுர்த்திவிரதம்.



ஸ்ரீ விநாயகக் கடவுள் முன்னொரு கற்பத்தில் பிரமதேவன் கொட்டாவியில் உதித்த சிந்தூரன் என்பவனைச் சங்காரஞ்செய்யும் பொருட்டுக் கஜானன மூர்த்தியாய் அவதரித்ததினம் ஆவணி மாசம் பூர்வபக்ஷசதுர்த்தி. இந்தநாளில் சிவபிரானும் உமாதேவியாரும் அக்கடவுளைப் பூசித்ததினாலும் இவ்வுலகில் நம்முடைய மதஸ்தர்கள் யாவரும் வருடந்தோறும் ஆவணிமாச பூர்வபக்ஷசதுர்த்தியில் விநாயகர் விரதம் அநுஷ்டிக்க வேண்டும். ஆகையால்அன்றைத்தினம் காலையில் எழுந்து, ஸ்நானஞ் செய்து, நித்யாநுஷ்டானம் முடித்துக்கொண்டு

அபிஷேகம், அலங்காரம், அருச்சனை, நிவேதனம், தூபம், தீபம் இவைகட்கு வேண்டிய பொருள்களைச்சேகரித்து·ஓர் பூஜாமண்டபம் அலங்கரித்து, பரிசுத்தமானஇடத்து மிருத்திகை [மண்]எடுத்து, அதில் வேர், கல், செல்முதலியஜெந்துக்கள் இல்லாமல் ஆராய்ந்து, அதனைப்பிசைந்து, சிற்பநூல் விதிப்படி விநாயகக் கடவுளின்திருவுருவம் அமைத்து பலம் - க-உ-வ - இந்த இடைகளுக்குக் குறைவில்லாமல் பொன்னினால் ஒரு திருவுருவஞ் செய்வித்து, பின் கலசந்தாபித்து,கலசபூசைசெய்து, அக்கலசத்துக்குமேற்கில் எந்தாமிட்டு, அதன்மீது சொர்ன மூர்த்தியையும் மற்றொரு பீடத்தில் பிருதிவிமூர்த்தியையும் எழுந்தருளச்செய்து, ஆகமவிதிப்படி பூசித்து, இன்னின்ன மந்திரங்கள் ஜெபிக்க

வேண்டிய முறைப்படி ஜெபித்து வருகையில் பத்துச்செபத்திற்கு ஒரு தர்ப்பணமும், பத்துத்தர்ப்பணத்திற்கு ஒரு ஓமமும், பத்து ஓமத்திற்கு ஒருதரம் அன்னதானமும் செய்யவேண்டும். இதன்பின் பொன்முதலியவைகளைத் தங்கள் சக்திக்குத் தக்கபடி தானமுஞ் செய்யவேண்டும். இவ்விதமாக ஆகாரம் நித்திரை முதலியவைகளை நிக்கிரகித்தாவது, முதனாள்மாத்திரம் உணவை யொழித்து மற்றநாட்களில் பால்பழம் அவிசு இவற்றில் ஒன்றைப்புசித்துக்கொண்டாவது, இச்சதுர்த்தி தொடங்கிப் பின் வரும் பூவர்பக்ஷ சதுர்த்திவரையிலும் அனுஷ்டிக்க வேண்டும். அப்படி அனுஷ்டிப்பவர்கள் தங்கள் தங்கள் இஷ்டசித்திகளையும் சகல நன்மைகளையும் பெறுவார்கள். அருச்சனைக்கு மாசிபத்திரி,

தகளா, வில்வம், ஊமத்தை, நொச்சி, நாயுருவி, கத்தரி, வன்னி, அலரி, காட்டாத்தி, எருக்கு, மருது, காந்தி, மாதுளை, தேவதாரு, மரு, நெல்லி, சிறுசண்பகம் கெந்தளி, பாதிரி, அறுகுஆகிய இருபத்தொருவிதமானபத்திரங்கள் உரியவை. அன்னதானம் இருபத்தொரு பேருக்கு எவ்வளவும் குறையாமற் செய்யவேண்டும். இந்தவிரதம் அனுஷ்டிப்பதற்குக் காரணமும் கிரமமும் இங்குச் சுருக்கிச் சொல்லினோம். இவை பார்க்கவபுராணமென்னும் விநாயகபுராணத்தில் உபாசனகாண்டத்தில்-கரு-வது உமையம்மை உபாசித்த படலத்திலும், லீலாகாண்டத்தில் - ரு - வது கஜானனர் திருவவதாரப்படலத்தினும் விரித்துச் சொல்லப் பட்டிருக்கின்றன.



# விநாயகர் பூஜை.

சுக்லாம் பரதரம் விஷ்ணும்
சசிவர்ணம் சதுர்ப்புஜம்
ப்ரஸந்ந வதனம் த்யாயேத்
ஸர்வ விக்னோபசாந்தயே.

பிராணயாமம்.

ஆஸநேவிநியோக, ஆஸ்னந்ம, பூம் யாதி, ஊர்த்துவலோகஸ்ய, உபர்யஸ்து திவாகா, தசப்ரணவ, ஸம்யுக்தம், த்ரி ராவிர்த்தி, புர, அங்குள்யக்கா, நாசி காக்ரம், ஸம்பீட்டியம், பாபநாசனம், ப்ராணயாமம், இதம் ப்ரோக்தம், ருஷி பி, பரிகல்பிதம்.

(சங்கல்பம்.)

சுபாப்யாம், சோபனே முஹூர்த்தே, ஆத்ய ப்ரஹ்மண: துவிதீயபரார்த்தே, ஸ்வேதவராஹ கல்பே, வைவஸ்வதே மந்வந்தரே, கலியுகே,ப்ரதமபாதே

ஜம்பூத்த்வீபே,பரதவர்ஷே. பரதக்கண்டே, அஸ்மின், வர்த்தமானே, வ்யாவஹாரிக சாந்த்ர ஸௌரமானேன, ப்ரபவாதி ஷஷ்டி ஸம்வத் ஸராணும்,மத்யே (விரோதிநாம) ஸம்வத்ஸரே (தக்ஷி) ணாயனே, (வருஷ) ருதௌ, (பாத்திரபத) மாஸே, (சுக்ல) பக்ஷே, (சதுர்த்தி) யாம், (சுக்கிரவார) யுக்தாயாம் (சித்திர) நக்ஷத்திர யுக்தாயாம், சுபநக்ஷத்ர, சுபயோக, சுபகரண, ஏவம்குண விசேஷண விசிஷ்டாயாம் சுபதிதௌ, * [மம]

() இக்குறிக்குள் அடங்கிய வருஷம் அயனம், ருது, மாசம், பக்ஷம், திதி, வாரம், நக்ஷத்திரம், ஆகிய இவைகளைப் பூசை நாட்களிற்கு எற்க மாற்றிக்கொள்ளவேண்டும்.

* "மம,, என்னும் சொல்லை பிர்மசாரியும், "அஸ்மாகம்,, என்னும் சொல்லை கிருகஸ்தனும் உபயோகப் படுத்தவேண்டியது.

அஸ்மாகம் ஸஹகுடும்பானும் க்ஷேமஸ்தைர்ய விஜய ஆயுராரோக்ய ஐசுவர்யாபி விருத்தியர்த்தம், தர்மார்த்த காமிய மோக்ஷ சதுர்வித பல புருஷார்த்த சித்யர்த்தம், இஷ்டகாம்யார்த்த வித்யர்த்தம், புத்திரபௌத்ராபி விர்த்யர்த்தம், மனோவாஞ்சா பலஸித்யர்த்தம், (* வருஷே வருஷே பிரயுக்த வரசித்திவிநாயக மூர்த்தியஸ்ய) வரசித்தி விநாயக ப்ரீத்யர்த்தம், யாவச்சக்கிய தியான மாவாஹனாதி சமஸ்தஷோடசோபசார பூஜாஞ்சகரிஷ்யே நம.

### கலச பூசை.

ததங்க கலசபூஜாஞ்ச கரிஷ்யேநம: கலசம் கந்தபுஷ்ப அக்ஷதாம் ஸமர்ப்பயா

---

* நித்தியபூசையில் "வருஷேவருஷே பிரயுக்த வரசித்தி விநாயக மூர்த்தியஸ்ய, என்பதை நீக்கிப் பூசிக்கவும்.

மி. கங்கேச யமுனேசைவ கோதாவரி ஸரஸ்வதி நர்மதே ஸிந்துகாவேரி ஜலே ஸ்மின் ஸந்நிதிம்குரு கலசோதகேன பூ ஜா த்ரவ்யாணி தேவமாத்மானஞ்ச ப் ரோக்ஷய:.

மகா கணபதியே நம;—த்யாயா மி, ஆவாஹயாமி, ஆஸனம் ஸமர்ப்பயா மி, அஸ்தயோ: அர்க்யம் ஸமர்ப்பயாமி, ஸ்தபயாமி, ஸ்நானம் ஸமர்ப்பயாமி, ஸ் நானனந்தரம் ஆசமனீயம் ஸமர்ப்பயா மி, வஸ்த்ரார்த்தம் அக்ஷதாம் ஸமர்ப்ப யாமி யக்யோபவீதார்த்தம் அக்ஷதாம் ஸமர்ப்பயாமி, கந்தம்ஸமர்ப்பயாமி, அல ங்கரணார்த்தம் அக்ஷதாம்ஸமர்ப்பயாமி கந்தஸ்யோபரி புஷ்பாணிபூஜயாமி.

ஓம் ஸுமுகாயநம:
ஏகதந்தாயநம:
கபிலாயநம:
கஜகர்ணிகாயநம:
லம்போதராயநம:
விகடாயநம:
விக்நராஜாயநம:
விநாயகாயநம:
தூமகேதுவேநம;
கணாத்யக்ஷாயநம:
பாலசந்த்ராயநம:
வக்ரதுண்டாயநம:
சூர்ப்பகர்ணாயநம:
ஹேரம்பாயநம:
ஸ்கந்தபூர்வஜாயநம;
மஹா கணாதிபதியேநம;

நாநாவித பத்ராணி புஷ்பாணி ஸமர்ப்பயாமி, தூபம் ஆக்கிராபயாமி, தீபம் தர்சயாமி.

நமோநம: புண்டரீ காக்ஷாய நம: புரோக்ஷியா பரிஷிச்ய யதாபாகம்.

(※ காலேநைவேத்யம்ஸமர்ப்பயாமி.)

ஹஸ்த ப்ரக்ஷாளனம் ஸமர்ப்பயாமி, பாத ப்ரக்ஷாளனம் ஸமர்ப்பயாமி, புனர் ஆசமனீயம் ஸமர்ப்பயாமி, தாம்பூலம் ஸமர்ப்பயாமி, ஸுவர்ணபுஷ்ப தக்ஷிணம் ஸமர்ப்பயாமி, கர்ப்பூர நீராஞ்சனம் ஸமர்ப்பயாமி.

---

※ பூஜாகாலத்தில் இயன்ற குடோபகாரம் (வெல்லம்) நாரிகேள கண்டத்துவயம் (தேங்காய்முடி) சம்புபழம் (நாகப்பழம்) கதலிபலம் (வாழைப்பழம்) நிவேத்யாமி.

## பிரார்த்தனை.

வக்ரதுண்ட மஹாகாய
ஸூர்யகோடி ஸமப்ரபா
அவிக்கம் குருமேதேவ
ஸர்வகார்யேஷுஸர்வதா.

மந்த்ர புஷ்பம் ப்ரதக்ஷிண நமஸ்காரம் ஸமர்ப்பயாமி, சத்ர சாமர நிர்த்யகீத வாத்யாதி ஷோடசோபசார பூஜாம்ஸமர்ப்பயாமி. மந்த்ரஹீனம், க்ரியாஹீனம் பக்திஹீனம் கணாதிபயத்பூஜிதம் மயா தேவ பரிபூரணம் ததஸ்துதே.





கணபதி துணை.

ஒளவையார் அருளிச்செய்த

# விநாயகர் அகவல்.

## வரலாறு.

சுந்தரமூர்த்தி நாயனாருடனே கைலாயத்துக்குப் பரமசிவனுடைய சந்நிதானத்தில் ஆதியுலா அரங்கேற்ற எழுந்தருளும் சேரமான் பெருமாணாயனார் ஒளவையாரை அழையாமல் வந்துவிட்டோமேயென்று நினைத்தார். அது இச் "சீதக்களப,, என்கிற அகவலைக்கொண்டு, விநாயகரைப் பூசித்துக்கொண்டிருந்த ஒளவையாருக்குத் தெரிந்து தானும் அவர்களுடனே கயிலாயத்துக்குப்போகவேண்டுமென்கிற விருப்பங்கொண்டு துரிதமாய்ப் பூசைசெய்தார். விநாயகர்

ஔவையே, நீ கிரமப்படி பூசைசெய், அவர்களுக்கு முன்னதாகவே நீபோய்க் கயிலாயஞ் சேரும்படி செய்வோம், என, அவ்வாறே தாம்பூசைசெய்து முடித்தனர். உடனே விநாயகக்கடவுள் தமது துதிக்கையா லெடுத்துவிடக் கயிலாயத் தடைந்தனர். பின்பு வந்துசேர்ந்த சேரமான் பெருமாணுயனாரும் ஔவையாரைக் கண்டு அதிசயப்பட்டார். அச்சமயத்தில் ஔவையார்சொன்ன

கட்டளைக்கலித்துறை.

மதுரமொழிநல் லுமையாள்புதல்வன் மலர்ப்பதத்தை, முதிர நினையவல்லார்க் கரிதோமுகில் போன்முழங்கி, யதிரநடந்திடும் யானையுந்தேரு மதன்பின்வருங், குதிரையுங்காதங் கிழவியுங்காதங் குலமன்னனே.



உ

கணபதி துணை.

# விநாயகர் அகவல்.



(சு லோ க ம்.)

மூஷிகவாகன மோதஹஹஸ்த ;
சாமரகர்ண விளம்பிதசூத்திர
வாமனரூப மஹேஸ்வரபுத்ர
விக்நவிநாயக பாதநமஸ்தே.

சீதக் களபச்
செந்தா மரைப்பூம்
பாதச் சிலம்பு
பலவிசை பாடப்
பொன்னரை ஞாணும்
பூந்துகி லாடையும்
வன்ன மருங்கில்
வளர்ந்தழ கெறிப்பப்
பேழை வயிறும்
பெரும்பாரக் கோடும்

வேழ முகமும்
விளங்குசிந் தூரமும்
அஞ்சு காமு
மங்குச பாசமும்
நெஞ்சிற் குடிகொண்ட
நீல மேனியும்
நான்ற வாயும்
நாலிரு புயமும்
மூன்று கண்ணு
மும்மதச் சுவடும்
இரண்டு செவியு
மிலங்குபொன் முடியும்
திரண்டமுப் புரிநூ
றிகழொளி மார்பும்
அற்புத நின்ற
கற்பகக் களிறே
முப்பழ நுகரும்
மூஷிகவாஹன

இப்பொழு தென்னை
யாட்கொள வேண்டித்
தாயா யெனக்குத்
தானெழுந் தருளி
மாயாப் பிறவி
மயக்க மறுத்துத்
திருந்திய முதலைந்
தெழுத்துந் தெளிவாப்
பொருந்தவே வந்தென்
னுளந்தனிற் புகுந்து
குருவடி வாகிக்
குவலயந் தன்னில்
திருவடி வைத்துத்
திறமிது பொருளென
வாடா வகைதான்
மகிழ்ந்தெனக் கருளிக்
கோடா யுதத்தாற்
கொடுவினை களைந்தே

உவட்டா வுபதேசம்
புகட்டியென் செவியில்
தெவிட்டாத ஞானத்
தெளிவையுங் காட்டி
ஐம்புலன் றன்னை
யடக்கு முபாயம்
இன்புறு கருணையி
னினிதெனக் கருளிக்
கருவிக ளொடுங்குங்
கருத்தினை யறிவித்
திருவினை தன்னை
யறுத்திருள் கடிந்து
தலமொரு நான்குந்
தந்தெனக் கருளி
மலமொரு மூன்றின்
மயக்க மறுத்தே
ஒன்பது வாயி
லொருமந் திரத்தால்

ஐம்புலக் கதவை
  யடைப்பதுங் காட்டி
ஆறு தாரத்
  தங்குச நிலையும்
பேறு நிறுத்திப்
  பேச்சுரை யறுத்தே
இடைபிங் கலையி
  னெழுத்தறி வித்துக்
கடையிற் சுழுமுனைக்
  கபாலமுங் காட்டி
மூன்றுமண் டலத்தின்
  முட்டிய தூணின்
நான்றெழு பாம்பி
  ஞவி லுணர்த்திக்
குண்டலி யதனிற்
  கூடிய வசபை
விண்டெழு மந்திரம்
  வெளிப்பட வுரைத்து

மூலா தாரத்தின்
மூண்டெழு கனலைக்
காலா லெழுப்புங்
கருத்தறி வித்தே
அமுத நிலையு
மாதித்த னியக்கமும்
குமுத சகாயன்
குணத்தையுங் கூறி
இடைச்சக் கரத்தி
னீரெட்டு நிலையும்
உடற்சக் கரத்தி
னுறுப்பையுங் காட்டிச்
சண்முக தூலமுஞ்
சதுர்முக சூட்சுமமும்
எண்முக மாக
வினிதெனக் கருளிப்
புரியட்ட காயம்
புலப்பட வெனக்குத்

தெரியெட்டு நிலையுந்
தெரிசனப் படுத்திக்
கருத்தினிற் கபால
வாயில் காட்டி
இருத்தி முத்தி
யினிதெனக் கருளி
என்னை யறிவித்
தெனக்கருள் செய்து
முன்னை வினையின்
முதலைக் களைந்து
வாக்கு மனமு
மில்லா மனோலயந்
தேக்கியே யென்றன்
சிந்தை தெளிவித்
திருள்வெளி யிரண்டுக்
கொன்றிட மென்ன
அருடரு மானந்தத்
தழுத்தியென் செவியில்

எல்லை யில்லா
வானந்த மளித்
தல்லல் களைந்தே
யருள்வழி காட்டிச்
சத்தத்தி னுள்ளே
சதாசிவங் காட்டிச்
சித்தத்தி னுள்ளே
சிவலிங்கங் காட்டி
அணுவிற் கணுவா
யப்பாலுக் கப்பாலாய்க்
கணுமுற்றி நின்ற
கரும்புள்ளே காட்டி
வேடமு நீறும்
விளங்க நிறுத்திக்
கூடுமெய்த் தொண்டர்
குழாத்துடன் கூட்டி
அஞ்சக் கரத்தி
னரும்பொரு டன்னை

நெஞ்சக் கருத்தி
னிலையறி வித்துத்
தத்துவ நிலையைத்
தந்தெனை யாண்ட
வித்தக விநாயக
விரைகழல் சரணே.

விநாயகர் அகவல்

முற்றிற்று.

